பண்டாரத்து புந்செய் வரிசை (யா)ல் வெலி ஒந்றுக்கு நெல் ஐங்கலமாக ராஜகேஸரி மர(க்)காலால் இந்நிலம் நாலெமுக்காலு (க்)கும் அளப்பத(ாந)ஜகள வத நஇந்நெல் இருபத்து முக்கலநெ இருதூ(ணி) (க்குறு)

20. ணியும் அளக்குமிடத்தில் கார் ப(ாதி) (பசாநம்) பாதி அளப்ப தாகவும் (இ)தி(ல்) மிகுதி கொ(ண்)டு இவன் இடங்கை நாயக (ரெந்)று எழு(ந்த)ருளிவித்தஇஷபவா ஹந தேவர்க்கும் நம்பிராட் டி(யா)ர்க்கும் திருமஞ்சனபடிக(ளு)க்(கு)ம் திருவ(மு)து படிக்கும் இர(ண்)டு திருநாளிலும் (இ)ர(ண்டு) நாெ(ள)ழுந்தரு(ளு) (கக்கு)

21. உள்ளிட்டு வெ(ண்டு) நிமந்தங்களுக்கு நிமந்தஞ் செய்து (குடு)த் தோம் மு(னே)யந் (அரு)ெ(மாழி)ெ(தவ)நா(ன)வில்லவராய(நு)க்கு திருவானைக்காவு(ை)டய எம்ெ(ப)ரு மாநுக்கு மூலப்பிரத்ய நாகிய சண்டேஸ்வரந் (உ)ள்(ளிட்)டக (ந்மி) களோம் இது பந்மா ஹேஸ்வரரக்ஷை.

இருக்குமிடம்: திருச்சிராப்பள்ளிக்கு அருகிலுள்ள திருவானைக்கா கோயி லின் இரண்டாம் பிராகாரத்தின் கீழ்ச் சுவர்

———o———

# நீடுர்க்கல்வெட்டுக்கள்-எபிகிராபியா இண்டிகா வால்.18, நெ. 8. பெருந்தொகை பக்கங்கள் 278, 279

9. ஆரிய வுலக மனைத்தையுங் குடைக்கீழ்
ஆக்கிய குலோத்துங்க சோழற்
காண்டொரு நாற்பத் தாறிடைத் தில்லை
யம்பலத் தேவட கீழ்பால்
போரியன் மதத்துச் சொன்னவா றறிவார்
கோயிலும் புரானநூல் விரிக்கும்
புரிசைமா ளிகையும் வரிசையால் விளங்கப்
பொருப்பினுன் விருப்புறச் செய்தோன்
நேரியற் காண்டோ ரஞ்சுடன் மூன்றில்
நிகரிலாக் கற்றளி நீடூர்
நீலாவினுற் கமைத்த நிலாவினு னமுத
சாகர னெடுந்தமிழ் தொகுத்த
காரிகைக் குளத்தூர் மன்னவன் றென்னை
காவலன் சிறுகுன்ற நாட்டுக்
கற்பக மிழலை நாட்டுவே ளாண்மை
கொண்டவன் கண்டன் மாதவனே

10. எண்டிசை யுலகை யொருகுடை நிழற்கீ
ழிருத்திய குலோத்துங்க சோழற்
கியாண்டொரு முப்பத் தெட்டினிற் சோனாட்
டிசைவள ரிந்தளூர் நாட்டுள்
உண்டை நீடியநீ ரூரு டுருமை யோடு
முலாவின சிவபெரு மானுக்
குவந்து வெண்கயிலை மலையெனச் சிலையா
லுத்தம விமானமிங் கமைத்தான்
தண்டமி ழமித சாகர முனியைச்
சயங்கொண்ட சோழமண் டலத்துத்
தண்சிறு குன்ற நாட்டகத் திருத்தித்
சந்தநூற் காரிகை யவனுற்
கண்டவன் மருமான் காரிகைக் குளத்தூர்க்
காவல னிலாவினு னெவர்க்குங்
கருணையு நிதியும் காட்டிய மிழலை
நாட்டுவேள் கண்டன் மாதவனே

# விக்கிரம சோழனின் தில்லைத் திருப்பணிகள்

(தென்னிந்திய சாஸனங்கள் வால்யூம் III பகுதி II எண் 79)
(திருமழபாடி வைத்தியநாத சுவாமி கோயிலில் இரண்டாவது பிரகாரத்தில் தென்புறச்சுவரிலுள்ளது)

பூமாலை மிடைந்து பொன்மாலை திகழப்
பாமாலை மலிந்த பருமணித் திரள் புயத்து
இருநில மடந்தை யோடு ஜயமகளிருப்பக்
கனவரை மார்பம் தனதெனப்பெற்றுத்
திருமகள் ஒருதனி யிருப்பக் கலைமகள்
செந்திறம் புணர்ந்த கற்பினலாகி
விருப்பொடு நாவகத் திருப்பத் திசைதொறும்
திகிரியோடு செங்கோல் நடப்ப அகில
புவனமும் கவிப்பதோர் புதுமதிபோல
வெண்குடை மீமிசை நிழற்றக் கருங்கலி
ஒளித்துவன் பிலத்திடைக் கிடப்பக் குளத்திடைத்
தெலுங்க வீமன் விலங்கல்மிசை யேறவும்

கலிங்க பூமியைக் கனலெரி பருகவும்
ஐம்படைப் பருவத்து வெம்படை தாங்கியும்
வேங்கை மண்டலத் தாங்கினி திருந்து
வடைதிசை யடிபடுத் தருளித் தென்திசைத்
தருமமும் தவமும் தானமும் தழைப்ப
வேதமும் மெய்மையும் ஆதியுகம் போலத்
தலைத்தலை சிறப்பவந் தருளி வெலற்கரும்
போர்ப்புலி யாணை பார்த்திவர் சூட.
நிறைமணி மகுடம் முறைமையிற் சூடி

மன்னுயிர்க் கெல்லாம் இன்னுயிர்த் தாய்போல்
தண்ணளி பரப்பித் தனித்தனி பார்த்து
மண்முழுதும் களிப்ப மனுநெறி வளாத்துத்தன்
கோயில் கொற்ற வாசற் புத்றது
மணிநா வொடுங்க முரசுகள் முழங்க
விசையமும் புகழும் மேன்மே லோங்க
வாழிவாழி இம் மாநிலங் காக்கத்

திருமணிப் பொற்றேட் டெழுது பத்தாண்டு
வருதிறை முன்னே மன்னவர் சுமந்து
திறைநிறைத்துச் சொரிந்த சொம்பெற் குவையால்
தன்குல நாயகன் தாண்டவம் பயிலும்
செம்பொன் னம்பலஞ் சூழ்திருமாளி கையும்
கோபுர வாசல் கூட சாலைகளும்
உலகுவலங் கொண்டொளி விளங்கு நேமிக்
குலவரை உதைய. குன்றமொடு நின்றெனப்
பசும் பொன் மேய்ந்து பலிவளர் பீடமும்
விசும் பொளி தழைப்ப இமையவர் களிப்பப்
பெரிய திருநாள் பெரும் பெயர் விழாவெனும்
உயர்பூ ரட்டாதி உத்திரட் டாதியில்
அம்பலம் நிறைந்த அற்புதக் கூத்தர்
இம்பர் வாழ் எழுந்தருளு தற்குத்
திருத்தேர்க் கோயில் செம்பொன் மேய்ந்து
பருத்திரண் முத்தின் பயில்வடம் பரப்பி
நிறைமணி மாளிகை நெடுந்திருவீ திதன்
திருவளர் பெயரால் செய்து சமைத்தருளி
பைம் பொன்குழித்த பரிகலமுதனச்
செம்பொன் கற்பகத் தொடு பரிச் சின்னமும்
அளவில்லாதன ஒளிபெற அமைத்துப்
பத்தாமாண்டில் சித்திரைத் திங்கள்
அத்தம் பெற்ற ஆதிவாரத்துத்
திருவளர் மதியின் திரையோதசிப் பக்கத்து
இன்னபலவும் இனிது சமைத்தருளி
ஒருகுடை நீழல் தலமுழுதும் களிப்பச்
செழியர் வெஞ் சுரம்புகச் சோலர் கடல்புக
அழிதரு சிங்களர் அஞ்சி நெஞ்சலமரக்
கங்கர் திறையிடக் கன்னடர் வெந்நிடக்
கொங்கர் ஒதுங்கக் கொங்கணர் சாயமற்
றெத்திசை மன்னரும் தத்தமக் காணெனத்
திருமலர்ச் சேவடிஉரிமையில் இறைஞ்ச
அங்கவன் மகிழும் கங்கை யொப்பாகிய

தெரிவையர் திலதம் தியாகபதாகை
புரிகுழல் மடப்பிடி புனிதகுண வனிதை
திரிபுவன முழுதுடையாள் எனவுடனிருப்ப
ஊழி யந்நெடு மாலா கத்துப்
பிரியா தென்றுந் திருமகளிருந்தென.
மாதர் மடமயில் பூதலத் தருந்ததி
அரணிவியல் கற்பிற் றரணிமுழுதுடையாள்
இவன்திரு மார்வத் தருளொடு மிருப்பச்
செம்பொந் வீர சிம்மா சனத்துத்
திரிபுவன முழுதுடை யாளோடும்
வீற்றிருந் தருளிய கோப்பர கேசரி
வர்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள்
ஸ்ரீவிக்கிரமசோழ தேவர்க்கு 15 ஆவது
திரிபுவன முழுதுடை வளநாட்டுப்
பொய்கை நாட்டுஉடையார் திரு மழுவாடி
உடையார் கோயிலில் ஆதிசண்டேசுவர
தேவர் ஆதேசம். அருளால் இக் கோயிலில் ஸ்ரீ-
மாஹேச்வ ரோமும் ஸ்ரீ கார்யம் செய்வாரும்
இது கோயில் கணக்கு நெல்குப்பையுடையானும்
உள்ளிட்டஸ் தானத் தோம்எழுத்து, இக்கோயிலில்
ஸ்ரீநந்தி கேசுவர தேவரை எழுந்தளுரு
வித்த அன்னியூருடையான் எச்சில் மண்டை
செந்தாமரைக் கண்ணனான ஸ்ரீ நந்தி கேசுவரநம்பி.....

# காலிங்க ராயனின் சிதம்பரத்து வெண்பாக் கல்வெட்டுக்கள் (தென்னிந்திய சாஸனங்கள் வால்யூம் IVஎண் 225)

1. எல்லை கடலா விகல்வேந்த ரைக்கவர்ந்த
   செல்வமெலாந் தில்லைச்சிற்றம்பலத்துத் - தொல்லைத்
   திருக்கொடுங்கை பொய்மேய்ந்தான் திண்மைக் கலியின்
   தருக்கொடுங்க வெல்கூத்தன் மூன்.
2. தில்லையிற்பொன் னமபலத்தைச் செம்பொனால் மேய்ந்துவா
   னெல்லையைப்பொன் னாக்கினான் என்பரால்-ஒல்லை
   வடவேந்தர் செல்வமெலாம் வாங்கவேல் வாங்கும்
   இடைவேந்தன் தொண்டையர் கோ
3. தென்வேந்தன் கூனிமிர்த்த செந்தமிழர் தென்கோயில்
   பொன்மேய்ந்து திக்கைப் புகழ்வேய்ந்தான் -ஒன்னார்க்குக்
   குற்றம் பலகண்டோன் கோனிழைக்கும் வேல்கூத்தன்
   சிற்றம் பலத்திலே சென்று.
4. பொன்னம் பலக்கூத்த ராடம் பலமணவிற்
   பொன்னம் பலக்கூத்தர் பொன்மேய்ந்தார் -தென்னர்
   மலைமன்னர் ஏனை வடமன்னர் மற்றக்
   குலமன்னர் செல்வமெலாம் கொண்டு.
5. தில்லைச்சிற் றம்பலத்தே பேரம் பலந்தன்னை
   மல்லற் கடற்றானை வாட்கூத்தன் -வில்லவர்கோன்
   அம்புசேர் வெஞ்சிலையின் ஆற்றல்தனை மாற்றியகோன்
   செம்புமேய் வித்தான் னெரிந்து.
6. ஏனை வடவரசர் இட்டிடைந்த செம்பொன்னால்
   ஏன லெனத்தில்லை நாயகருக் — கானெய்
   சொரிகலமா மாமயிலைத் தொண்டையர்கோன் கூத்தன்
   பரிகலமாச் செய்தமைத்தான் பார்த்து.
7. தெள்ளு புனற்றில்லைச் சிற்றம் பலத்தார்க்குத்
   தள்ளியெதி முரம்பலந்தா தன்பாதம் — புள்ளுண்ண

நற்பிக்கங் கொண்ட நரலோக வீரன்செம்
பொற்படிக்கங் கண்டான் புரிந்து.

8. இட்டா னெழிற்றில்லை யெம்மாற் கிசைவிளங்க
மட்டார் பொழின்மணவில் வாழ்கூத்தன் -ஒட்டரரை
யின்பமற்ற தீத்தானம் ஏற்றினன் ஈண்டொள்சேர்
செம்போற் றனிக்காளஞ் செய்து.

9. ஆகுந் தனித்தேனுக் கம்பலத்தே கர்ப்பூரம்
நீடுந் திருலிளக்கு நீடமைத்தான் -கூடார்
அடிக்கத் தினைநரியும் புள்ளுந் —.
கடிக்கப் பெருங்கூத்தன்ருன்

10. பொன்னம் பலம்சூழப் பொன்னின் திருவிளக்கால்
மன்னும் திருச்சுற்று வந்தமைத்தான் -தென்னவர்தம்
பூவேறு வார்குழலா ரோடும் பொரும்பேற
மாபேறு தொண்டையார் மன்

11. சிற்றம் பலத்தானை யேத்தினன் தெவ்விடத்துக்
கொற்றத்தால் வந்த கொழு நெதியால் -பற்ருர்
தருக்கட்ட வஞ்சினவேற்ருனர்மணவில் கூத்தன்
திருக்கட்ட மஞ்சனமும் செய்து.

12. தொல்லைப் பதித்தில்லைக் கூத்தர்க்குத் தொண்டையர் கோன்
எல்லைத் திசைக்கரிகள் எட்டளவும்- செல்லப் போய்ச்
சாலமுது பேய்நடிக்க[த் தார்தாங்கு] தொண்டையார்கோன்
பாலமுது செய்வித்தான் பார்த்து.

13. ஆடுந் தெளிதேனை ஆயிர நாழிநெய்யால்
ஆடும் படிகண்டான் அன்றினர்கள் -ஒடுந்
திறங்கண்ட தானன் சினக்களிற்ருன் ஞாலம்
அறங்கண்ட தொண்டையர்கோ னுங்கு.

14. நட்டப் பெருமானர் ஞானங் குழைந்தளித்த
சிட்டப் பெருமான் திருப்பதியம் -முட்டாமைக்
கேம்போர்க்கு மண்டம்தைச் செய்தான்றெவ் வேந்தர்கெட
வாட்போக்குந் தொண்டையர்கோன் மன்.

15 மல்லற் குலவரையா னூற்றுக்கால் மண்டபத்தைத்
தில்லைப் பிரானுக்குச் செய்தமைத்தான் -கொல்லம்
அழிவுகண்டான் சேரன் அளப்பரிய வாற்றற்
கிழிவுகண்டான் தொண்டையர்கோ னேறு.

16 தில்லைப் பெரிய திருச்சுற்று மாளிகை
எல்லைக் குலவரைபோ லீண்டமைத்தான் -தொல்லைநீர்
மண்மகளைத் தங்கோன் மதிக்குடைக்கீழ் வீற்றிருத்தி
உண்மகிழும் தொண்டையர்கோ னுற்று.

17 புட்கரணி கல்சாத்து வித்தான்பொற் கோயிலின்வாய்
விக்கரணம் பார்ப்படத்தன் மேல்விதித்து - திக்களவு
மாநடத்திக் கோனடத்தும் வாட்கூத்தன் மண்ணிலறத்
தானடத்தி நீடுவித்தான் ருன்.

18 வீதிசூழ் நல்விளக்கும் வீற்றிருக்க மண்டபமும்
மாதுசூழ் பாக மகிழ்ந்தருளும் - போதுசூழ்
தில்லைக்கே செய்தான் திசைக்களிறு போய்நிற்கும்
எல்லைக்கே செய்தலிங்க ரேறு.

19 நடங்கவின்கொள் அம்பலத்து நாயகச் செந்தேனின்
இடங்கவின்கொள் பச்சையிளந் தேனுக் (கு) - அடங்கார்
பருமா ளிகைமேல் பகடுகைத்த கூத்தன்
திருமா ளிகையமைத்தான் சென்று

20 எவ்வுலகு மெவ்வுயிரு மீன்று மெழிலழியாச்
செவ்வியாள் கோயிற் றிருச்சுற்றைப் -பவ்வஞ்சூழ்
எல்லைவட்டம் தன்கோற் கியலவிட்ட வாட்கூததன்
தில்லைவட்டத் தேயமைத்தான் சென்று

21 வாளுடைய பொன்பொதுவின் (மன்னனிட மாகும்)
ஆளுடைய பாவைக் கபிடேகம் -வேளுடைய
பொற்பினுன் பொன்னம் பலக்கூத்தன் பாங்குகட
வெற்பினுன் சாத்தினுன் வேறு

22. சேதாம்பல் வாய்மயிற்குத், தில்லையந் தேவிக்குப்
பீதாம் பரஞ்சமைத்தான் பேரொலிநீர் -மோ ர

அலேகின்ற வெல்லே யபயனுக்கே யாசு
டீலேநின்ற தொண்டையார் மன்.

23 செல்வி [திருத்தறங்கடென்] னகரித் தில்லேக்கே
நல்லமகப் பாலெண்ணெய் நாடோறும் -செல்லத்தான்
கண்டான் அரும்பையர் கோள் கண்ணகனீர் ஞாலமெல்லாம்
கொண்டானந் தொண்டையர் கோன்.

24. பொன்னு லகுதாம் புலியூர் தொழுவதற்கே
உன்னி யிழிகின்ற தொக்குமால் -தென்னர்
(குடிவி) டா மன்செகுத்த கூத்தன்செம் பொன்னின்
கொடிபுறஞ் செய்த குழாம்-

25. ஆதிசெம்பொ னம்பலத்தி னம்மா னெழுந்தருளும்
வீதியும்பொன் மேய்ந்தனைனுய் மேல்விளக்குஞ் -சோதிக்
குடையுடைத்தாய்ப் பொன்னுற் றூறுகவலா னென்றும்
படியமைத்தான் றெண்டையர்கோன் பார்த்து.

26. நாயகர் வீதி யெழுந்தருளும் நன்னுளால்
தூய கருவெழு தூபத்தாற் -போயொளிர்சேர்
வான்மறைக்கக் கண்டானிம் மண்மகனே வண்புகழால்
தான்மறை கூத்தன் சமைத்து.

27, [பரனுமை வேட்பவே சைவா சிரியர்]
திருவுருவ மானதிருக் கோலம் பெருகொளியாற்
காட்டினன் தில்லேக்கே காசினிவாய் வெங்கலியை
ஓட்டினன் தொண்டையர் கோன்.

28. மன்னுதிகழ் தில்லேக்கே வாணிக் கரசகணந்
துன்றும் பொழின்மணவிற் றெண்டைமான் -என்றும்
இருந்துண்ணக் கண்டான் இகல்வேந்த ராகம்
பருந்துண்ணக் கண்டான் பரிந்து.

29. தில்லேத் தியாகவலி [விண்சிற் பஞ்சவினி]
எல்லே நிலங்கொண் டிறையிழிச்சித்-தில்லே
மறைமுடிப்பார் வீதி மடஞ்சமைத்தான் மண்ணோர்
குறைமுடிப்பான் தொண்டையர் கோ.

30. என்றும் பெறுதலா லேரா ரெழிற்புலியூர்
மன்றி னடனுக்கு மாமத்தக் -குன்று
கொடுத்தருளி மண்ணிற் கொடுங்கலி வாராமே
தடுத்தனன் தொண்டையர்கோன்ருன்.

31. முத்திறத்தாரீசன் முதற்றிறத்தைப் பாடியவா
ருெத்தமைத்த செப்பேட்டி னுள்ளெழுதி -இத்தலந்தி
னெல்லைக கிரிவா யிசைபெழுதி ஞன்கூத்தன்
தில்லைச்சிற் றம்பலத்தே சென்று.

32. தில்லை யொளிநும் தெளிநேன் ஒளிதழைப்ப
நல்லதிரு நந்தா வனஞ்சமைத்தான் -வில்லத்திற்
கோட்டங்கொள் வாள்வேந்தர் கொற்றக் களியானை
யீட்டங்கொள் காலிங்க ரேறு.

33. நூரு யிரந்தமுகு மாங்கமைத் தான்சினத்தின்
மாருக வெல்களிற்று வாட்கூத்தன் -கூருளும்
வல்லி சிறுகிடைக்கு வான்வளர மாநடஞ்செய்
தில்லைச்சிற் றம்பலத்தே சென்று.

34. மாசிக் கடலாடி வீற்றிருக்க மண்டபமும்
பேசற் றவற்றைப் பெருமவழியும் - ஈசற்குத்
தென்புலியூர்க் கேயமைத்தான் கூத்தன் திசையனைத்து
மன்புலியாணை நடக்க வைத்து.

35. ஓங்கியபொன் னம்பலத்தார்க் கோரா யிரஞ்சுரபி
ஆங்களித்தா னேற்றெதிர்ந்தா ராயினழயார் - தரங்கா
தொருக்கியுட லாவியுயிர்த்துநாட் போக்கி
யிருக்கவென்ற தொண்டையா ரேறு.

36. தொல்லோர்வாழ் தில்லைச் சுடலைபமர்ந் தார்கோயில்
கல்லா லெடுத்தமைத்தான் காசினியிற் --ருெல்லை
மறைவளர்க்க வெங்கலியை மாற்றிவழு வாமல்
அறம்வார்க்கக் காலிங்க ஞய்ந்து.

37. தில்லைமூ வாயிரவர் தங்கள் திருவளர
எல்லையில் பேரேரிக் கெழின்மதகு --கல்லினுற்
ருனமைத்தான் றெப்வேந்தர்க் கெல்லாந் தலந்தவிர
வானமைத்தான் தொண்டையார் மன்.

# மடத்துக் கோவில் கல்வெட்டு

## புதுக் கோட்டை சாஸனங்கள் எண் 129.

(குளத்தூர்தாலூக நாங்கு பட்டிவட்டம் மடத்துக் கோவிலில் முதல்பிரகாரத்து வாசற் படிக்கு வலதுபுறம் சுவரிலுள்ளது)

வாளை வயிறு நிறைய மடறகமுகம்
பாளைபசுந் தேனொழுகும் பையூரே -நாளையென்று
செப்பாத வாய்மையான் வேதம் திருமனுநூல்
ஒப்பானெங் கோமான்ற ஞர்.

ஸ்வஸ்தி ஸ்ரீ கோவிராஜ கேஸரிபன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீகுலோத்துங்க சோழதேவர்க்கு யாண்டு 13 ஆவது இரட்டபாடி கொண்ட சோழவளநாட்டு வட கோநாட்டு உறத்தூர்க் கூற்றத்து உடையார் திருப்பெருமானுண்டார்க்கு ஜயங்கொண்ட சோழமண்டலத்துக் களத்தூர்க் கோட்டத்து மருதத்தூர் மருதத்தூருடையான் குன்றன் திருச்சிற்றம்பல முடையானேன். கன்னி நாயற்று ஏழாந்தியதியும் திங்கள்க்கிழமையும் பெற்ற உத்திரட்டாதி நாள் இத்திருப் பெருமானுண்டார் திருக்கைமலரிலே நான் நீர்வார்த்த குடிக்காடு, இரட்டபாடி கொண்ட சோழவளநாட்டு வடகோநாட்டு உறத்தூர்க் கூற்றத்துப் பையூர் பையூருடையான் திருச்சிற்றம் பல முடையான் வேத வனமுடையான் நான்கவிபாடி பாடினகவிக்கு எனக்குப் பரிசில்தந்த தனிகாணியான குடிக்காடு இறும்பூதிக்கு வடபாற்கெல்லை நெடுங்கீரைக்குடி எல்லைக்குத் தெற்கு, மேற்பாற்கெல்லை மேற்படியூர் எல்லைக்குக் கிழக்கு தென்பாற் கெல்லை பையூர் எருக்காட்டுக்கு......

# இரண்டாம் இராசாதிராசனது திருவொற்றி யூர்க் கல்வெட்டு

(தென்னிந்திய சாஸனங்கள் வால்யூம் V எண் 1358)

1. [illegible] .... [illegible]

கோவிராச கேசரிபன்மரான த்ரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீராஜாதிராஜ தேவர்க்கு யாண்டுஒன்பதாவது ஜயங்கொண்ட சோழ மண்டலத்துப்புழற் கோட்டத்து

2. உடையார்திரு வொற்றியூருடையார் கோயிலில் மடமுடைய சதுரானனபண்டிதனும் ஸ்ரீமாரஹ ...... டெனும் ஸ்ரீ-காரியம் அரியபிரான் பட்டனும் சோம சித்தாந்தம் வக்காணிக்கும் வாகீசுவர பண்டிதனும் கானும் பிடாரும் செயங்கொண்டசோழ மண்டல பிடாரனுந்

3. திருவொற்றியூர்ப் பிச்சனும் கோயில் நாயகம் படம் பக்க நாயகபட்டனும் கோயில் கணக்குத்திரு...... டயார் திருப்பங்குனி உத்திரத்து ஆருந்திருநாளான புதன்கிழமையும் ஏகாதசியும் பெற்ற ஆயிலயத்தினன்று படம் பக்க நாயகதேவர் திருமகிழின் கீட்திருவோ லக்கஞ் செய்தெழுந்தரு.

4. ளியிருந்து ஆளுடைய நம்பி ஸ்ரீ புராணம்கேட்டருளாநிற்க உடை யார்தேவதானம் விகுகப் பெரும்பாக் கத்துக காணி.... யென்று விண்ணபஞ் செய்ய நம்மூர்களில் இரணியூர் அமுதங்கிழவன் பெரி யான்சோமனுக்குத் தண்டீசன் விலையாக விற்றுக் காணியாகக் கொடு க்க வென்று திருவாய் மொழிந்

5. தருள இவ்வூருக்குக் காணிவிலை அன்றுடு நற்காசு நூற்றிருபதும் ஸ்ரீ பண்டாரத் தொடுக்குக்கொண்டு இவ்வ ..... ழவன் பெரியாஞ்

சோமனுக்கு ஸ்ரீ பண்டாரத்து இறையிறுக்கவும். இவனுக்கும் இவன் வம்சத்தார்கும் விற்றெற்றி, பிரதி கிரஹத்துக்குரித்தாவதாக விற்றுக் கொடுத்தோம் இப்படிக்கு இவைம

6. டமுடைய சதுரானன பண்டிதன் எழுத்து. இப்படிக்கு இவை திருவீதி வெயிடங் கொண்டான் எழுத்து..... ண் எழுத்து. இப் படிக்கு இவை சோமசித்தாந்தம் வக்காணிக்கும் வாகீச்வர பண்டிதன் எழுத்து இப்படிக்கி இவை காலும் பிடாரும் செயங்கொண்டசோழ மண்டலப் பிடாரன் எழுத்து. இப்படிக்கு

7. இவை திருவொற்றியூர்ப் பிச்சன்எழுத்து. இப்படிக்கு இவை கோயில் நாயகம் படம்பக்க நாயகபட்டன் எழுத்து .....
உறவாக்கினன் எழுத்து.

---

# மூன்றும் இராசராசனின் திருநெல்லிக் காவல் கல்வெட்டு

(ஏ. ஆர். நெ. 521 — 1904)

திருநெல்லிக்காவல், மன்னார்குடி தாலுகா, தஞ்சாவூர் மாவட்டம் கருவறையின் வடக்குச் சுவரில் அமலகேசவரர் கோயிலில் உள்ளது!

ராஜராஜா 111, ஆண்டு 20, 1235 - 36 கி. பி.

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச்சக்கரவத்திகள் ஸ்ரீ இராசராசதெவற்க்கு யாண்டு பதாவது (உ) டையார் திருநெல்லிக்கா (ஆளு) (உ) டையார் தெவர்த்தானத்துக் காணி உடைய திட்டைச் செரிஉடை-

2. யான் தில்லைபெருமானும் இவர் தம்பி கண்டராதித்த தெவ (நு)ம் இவன்தம்பி உய்ய (வந்) தபிள்ளையும் பக்கல் இக்கொயில் தானத்தார் திருநாமத்து (க்) 'காணியாக கொண்டு திருஞானசம்பந்தன்

3. திருக்குகையில் இருக்கு (ம்) மறைஞானசம்ப (ந்த) (னு) ம் ஆழித்தெர் வித்தகரும் (த) ங்கள் பியரில் திரிவிடுவித்து கொண்டு திரு நந்தவனமாக விடுகிற நத்தம் உவச்சன் காலுக்கு தெற்க்கு திருநாமத்

4. து கானிக்கு நடுவுபட்ட ஒழுக்கைக்கும் வடநத்தம் குழி அறுபத் தெட்டுக்கும் (பிரமாண) விலைப்படிகாசு ஆயிரத்திநூறும் சிபண்டாரத்து தானத்தார்வசம் ஒடுக்கி இ (ன்) னிலங்களும் குழி

5. இக்குழி அறுப (த்)தெட்டும் உடையற்ாகு திருநந்தவனமாக விட்டெ

6. ாம் இம் மறைஞானசம்பந்தரும் இவாழித்தெரிவித்தகரும் இவிருடெ

7. வாம் கொயிற்கணக்கு கொறங்குடையான் எழுத்து குறுக்கை

8. (புரந்த) ரகுருச் (சது) ற்வெதிமங்கலத்து த (ச்ச) காணிஉடைய

9. வெகந்திரி முடையாந் எழுத்து

# கோப் பெருஞ் சிங்கன் கல்வெட்டு

தென்னிந்திய கல்வெட்டுத் தொகுதி 12. பக்கம் 77.

கல்வெட்டு எண் 149

சிதம்பரம் நடராஜர் கோயில் மூன்றும் பிரகாரத்தில் வடக்குப் புறச் சுவரில் உள்ளது.

ஸ்வதிஸ்ரீ சகல புவன சக்கரவர்த்திகள் ஸ்ரீஅவனியாளப்பிறந் தாரான கோப்பெருஞ் சிங்க தேவர்க்கு யாண்டு ஆறுவதுசோழகோன் ஒலே ஜயதுங்க பல்லவரையரும் தில்லே அம்பல பல்லவரையரும் உரை யார் திருச்சிற்றம்பலமுடையார் கோயில்ஸ்ரீமகேஸ்வர கங்காணி செய்வார்களும் ஸ்ரீகாரியம் செய்வார்களும் சமுதாயம் செய்வார்களும் கோயில் நாயகம் செய்வார்களும் திருமாளிகைக் கூறு செய்வார்களும் கணக்கரும் கண்டு விடு தந்ததாவது. கோயிலுக்கும் திருக்காமக்கோட்ட முடைய பெரியநாச்சியார்க்கும் சிறப்பாக சாத்தியருள திருப்பூ மண் டபத்துக்கு முதலாக திருப்பள்ளித் தாமம் அளக்க பொன்மேய்ந்த சோழச் சருப்பேதி மங்கலத்து இராயூர்ச் சொட்டைநாயகரான ஸ்ரீகுமார பட்டன் திருநிலே அழகியாள் திருநந்தவனம் என்னும் திருநாமத்தால் செய்கிற திருநந்தவனத்துக்கு குண்டதரப்பாடியான திருச்சிற்றம்பல மங்கலத்தும் இராமதேவ மங்கலத்து புதுக் கொள்ளிட ஆற்றுக்கு வடகரைப்பட்ட நடுவில் காட்டில் இவன் காணியான கொல்லேயில் ஊர்மாவிந்த கடமை குடிமை இவ்வூரில் இவன் காணி யான நிலத்தில் எற்றி யிறுக்கக் கடவதாக விட்ட கொல்லே குழி முந் நூற்றி இருபதும் திருநந்தவனம் செய்ய ஒன்றேகால் ஆனி முதல் கொண்டு நாள் ஒன்றுக்கு கொயிலுக்கு குறுணித் திருப்பள்ளித்

தாமமும் திருக்காமக்கோட்டமுடைய பெரிய நாச்சியார் கோயிலுக்குக் குறுணித் திருப்பள்ளித் தாமமும் அளக்கவும் இவ்வாளுக்குக் கொற்றுக்கும் திருப்பாவாடைபுறம் திருநாமத்துக் காணியாகவும் பெரும்பற்றப் புலியூரில் உழைச்சாணம் மாதேவன் சிற்றம்பலமுடையான் பிராமணி பொன்னுண்டி பக்கல் மிதுனக்குடிக்கு ........ தில்லைப்பெருமாள் திருச்சிற்றம்பல முடையானுன வீரசோழ பிரம்மாதிராயர் பேரில் இவ்வூர்த் தென்பிடாகை புவலோக மாணிக்க வளநாட்டுப் பிரா ......... டான் பார்வதி நல்லூர் பாலசுந்தர சோழவதிக்த கிழக்கு சௌந்திரசிம்ஹ வாய்க்காலுக்குத் தெற்கு மூன்றும் கண்ணுற்று நாலாஞ் சதிரத்து கொடுத்தாளென்று பெயருடைய நிலமாய் விலைக்கொண்ட ஊர்ப்படி நிலம் முக்காலே ஒருமாவரையில் இந்தத் திருநந்த வனக் குடிகளுக்கு கொற்றுக்குஉடலாக வடக்கடைய விட்ட நிலம் அரையும் நீக்சி நிலம் அறுமாவரையும் திருப்பாவாடை புறம் திருநாமத்துக் காணியும் தில்லை நாயகம் பெரும்பண்டாரத்துக்கு முதலாக போனகப் பழநெல்லு அளக்கவும் இந்நிலம் முக்காலே ஒருமா வரைக்கும் தரப்படி மடக்கு முக்காணி முந்திரி கைக்கீழ் அரையே இரண்டு மாவுக்கும் ஊர்மா விந்த கடமை குடிமை ஊரில் கழிக்க மூலவருடையார் எழுதின நியோகமும் இந்த நிலமும் கொல்லையும் திருநாமத்துக்காணியாகத் தந்த பிரமாணமும் மூலப், பிரமாணங்களும் திருநந்தவனக் குடிமை கொண்ட திட்டும் திருக்கை ஒட்டி பண்டாரத்து ஒடுக்கவும் இப்படிக்கு திருமாளிகையில் கல்வெட்டுவதாகப் பண்ணுவதே இவை சோழகோன் எழுத்து என்றும் வந்த ஏவல்திட்டின்படி கல்வெட்டியது.

---

# பிச்சனென்று பாடச் சொன்னுன்

(தென்னிந்திய சாஸனங்கள் வால்யூம் XII எண் 231)

ஸ்வஸ்தி ஸ்ரீ ஸகலபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீகோப் பெருஞ்சிங்க தேவற்கு யாண்டு 27 ஆவது மேஷநாயற்று பூர்வபக்ஷத்து சதுர்த்தசியும் புதன்கிழமையும் பெற்ற அத்தத்தி நாள் திருவெண்ணை நல்லூர் உடையார். ஆட்கொண்டதேவற்கு மத்யஸ்தன் செஞ்சியுடையான் உதையன் ஸ்ரீ கையிலாய முடையான் இட்ட பிச்சனென்று பாடச் சொன்னுன் திருச்சின்னம் இரண்டினுல் வெள்ளி எடை ஐம்பத்து ஐங்கழஞ்சும் ஆவுடைய நாயனுர் சீபாதத்துச்சாத்தின கொடி உடன்கோத்த கால் காணை றையுடன் ஒன்பது மாற்றின்பொன் இருகழஞ்சு இதுபன். மாஹேசுவர ரக்ஷை.

# வேள்விக்குடிச் செப்பேடுகள் - செந்தமிழ்த் தொகுதி

கொல்யானை பலவோட்டிக் கூடாமன்னர் குழாந்தவிர்த்த பல்யா கசாலைமுதுகுடுமிப் பெருவழுதி என்னும் பாண்டியாதிராஜனு ளுகமாம லர்ச்சோலை நளிர்சினைமிசை வண்டலம்பும் பாகனூர்க் கூற்றமென்னும் பழனக்கிடக்கைநீர் நாட்டுச் சொற்கண்ணுளர்சொ லப்பட்ட சீருதி மார்க்கம் பிழையாது கொற்கை கிழானற்கொற்றன் கொண்ட வேள்வி முற்றுவிக்க கேள்வி அந்தணாளர்முன்பு கேட்க என்றெடுத்துரைத்து வேள்விசாலை முன்பு நின்று வேள்வி குடிஎன்றப் பதியைச் சீரொடு திரு வளரச் செய்தார் வேந்தனப்பொழுதேய் நீரோடட்டிக்கொடுத்தமை யானிடு புக்தி துத்தபின் னளவரிய ஆதிராஜரை அகலநீக்கி அகலிடத் தைக் கயிப்ரனென்னுங்கவி அரைசன் கைக்கொண்டதனை இறக்கிய பின் படுகடன்முளை த்தபருதிபோல் பாண்டியாயிராஜன் வெளிற்பட்டு விடுகதிரவிரொளி விசுலகவிற்றிருந்து வேலைசூழ்ந்தவியலிடத்துக்கோ வுங்குறும்பும் பாவுடன் முருக்கிச் செங்கோலோச்சிவெண்குடை நீழற் றங்கொளி நிறைந்தமங்கையைப் பிறர் பாலுரிமை திறவிதினீக்கித் தன்பாலுரிமை நன்கமைத்த மானம்பேர்த்த தானைவேந்தன் ஒடுங்கா மன்னரொளி நகரழித்த கடுங்கோனென்னுங்கதிர் வேற்றென்னன் மற்றவற்குமகனாகி மகீதளம் பொதுநீக்கி மலர்மங்கைஒ

டுமணனயர்ந்த அற்றமில் பரவைத்தானை, ஆயிராஜன் அவனீசூ ளாமணி எத்திறத்து மிகலழிக்கு மத்தயானை மாரவர்மன் மற்றவற்கு மருவினிய ஒருமகனாகி மண்மகளை மறுக்கடிந்து, விக்ரமத்தின் வெளிற் பட்டு விலங்கல் வேல்பொறிவேந்தர், பேந்தசிலைத் தடக்கைக்கொலைக் களிறுச்செழியன்வானவன் செங்கோற்சேந்தன்மற்றவற்குப் பழிப்பின்றி வழித்தோன்றி உதயநிரிமத்யத்துறுசுடர் போலத் தெற்றென்று திரை நடுங்க மற்றவன் வெளிற்பட்டுச் சூழியானை செலவுந்திப் பாழி வாயமர்கடந்து வில்வேலிக் கடற்றானையை, நெல்வேலிச் செரு

வென்றும் விரவிவந்தடையாத பரவரைப் பாழ்படுத்து, மறுகாவினம் புடை திளைக்குங் குறுநாட்டவர் குவங்கெடுத்துங் கைந் நலத்தகளிறு திச்செந்நிலத்துச் செருவென்றும், பாரளவுந்

தனிச் செங்கோற் கேரளனைப் பலமுறையுமு ரி மைச்சுற்ருமா.... யானை உம், புரிசைமீ மதிற்புலிஊரப் பகணுழிகை இறவாமை இக் கோழி உள்வென்றுகொண்டும், வேலாழி உம்வியன்பரம்பும் மேலா மைசென்றெறிந்தழித்தும், உறிரண்யகர்ப்பமுந் துலாபாரமும் தரணீ மிசைப்பல செய்து அந்தணர்க்கும் அசக்ரர்க்கும் வந்தனைக என்றித் தளித்த, மகரிகை அணிமணி நெடுமுடி கரிகேசரி அஞ்ஞுமஸமன் ஸ்ரீ மாரவர்மன் மற்றவற்கு மகனுகிக் கொற்றவேல் வலனேந்திப் பொதூ ருங்கடற்ருனையை மருதூருண்மாண்பழித் தாய்வேளை அகப்பட ஏயென் ருமை எறிந்தழித்துச் செங்கொடி உம்பு தான்கோட்டுஞ் செருவென் றவர் சினந்தவிர்த்துக் கொங்கலருந்நறும் பொழில் வாய்க்கு இலோ ●மஇலகவு மங்கலபுர மென்னுமெ மகாநகருண் மகாரதரை

எறிந்தழித்தறைகடல் வளாகம் பொதுமொழி அகற்றிச் சிலைஉம் புலி உங் கயலுஞ்சென்று நிலையமைநெடுவரை இடவகிற்கிடாய் மண்ணினி தாண்ட தண்ணளிச்செங்கோற் றென்னவானவன் செம் பியன்சோழன் மன்னர் மன்னன் மதுரக்ருநாடகன் கொன்னனின்ற நெடுஞ்சுடர்வேற் கொங்கர் கோமர்ன் கோச்சடையன், மற்றவற்கு புத்ரனுய் மண்மகளது பொருட்டாக மத்தயானை செலவுந்தி மான வேல்வலனேந்திக் கடுவிசையாலெதிர்ந்தவரை நெடுவயல்வாய் நிகர ழித்துக் கறுவடைந்த மனத்தவரைக் குறுமடைவாய்க்கூர்ப்பழித்து மன்னி குறிச்சி உந் திருமங்கைஉ முன்னிஎ்றவன் முரழித்து மேவலோர் கடற்றுனை ஒடேற்றெதிரேய்வந்த வரைப் பூவலூர்ப்புறங்கண்டுங் கொடும்புரி சைந்நெடுங்கிடங்கிற் கொடும்பாளூர்க் கூடார் கடும்பரி

உங், கருங்களிறுங் கதிர்வேலிற் கைக்கொண்டுஞ் செழும்புரவிப் பல்லவனைக் குழும்பூருட் டேசழிய எண்ணிறந்த மால்களிறு மிவுளி களும் பலகவர்ந்தும், தரிபலராய்த் தறித்தவரைப் பெரியலூர்ப்பிட ழித்தும் பூவிரிஉம் பொழிற்சோலைக்காவிரியைக்கடந்திட் டழகமைந்த வார்சிலை இன்மழகொ ங்கமடிப்படுத்து, மிண்டொளியமணி இமைக்கு மெழிலமைந்த நெடும்புரிசைப் பாண்டிக்கொடுமிடிசென் றெய்திப் பசுபதியது பத்மபாதம் பணிந்தேத்திக் கநகராசி உங்கதிர் மணிஉம் மனமகுழக்குடுத்திட்டுங் கொங்காவந் நறுங்கண்ணிக் கங்கராஜனெடு சம்பந்தஞ்செய்தும் எண்ணிறந்தன கொசஹஸ்வரமும் ஹிரண்யகர்ப் பமும் துலாபாரமும் மண்ணின் மிசைப்பலசெய்து மறைநாவினர் குறை தீர்த்துங் கடல் வஞ்சிகோழி என்னுமாடமாதில்

புதுக்சிஉம் மறைகடல்வளாகங் குறையாதாண்ட மன்னர்மன்ன தென்னவர் மருகன் மான வெண்குடைமான்றேர்மாறன், மற்றவற்கு மகனுகிமாலுருவின் வெளிற்பட்டுக் கொற்றமுன் றுடனியம்பக் குளிர் வெண்குடைமண்காப்ப, பூமகளும் புலமகளுந் நாமகளுந் நலனேத்தக் கலிஅரைசன் வலிதளரப்பொலிவினேடு வீற்றிருந்து கருங்கட லுடுத்தபெருங்கண்ஞாலத்து

நாற்பெரும் படை உம்பாத்படப்பாப்பிக் கருதாது வந்தெதிர் மலைந் தகாடவனைக் காடடையப் பூவிரிஉம் புனற்கழினிக்காவிரிஇன்றென் கரை மற் றண்ணுகம் மலர்ச்சோலை பெண்ணைகடத்தமர் வென்றுந் திவாய் அஇவேதித்திளைத்தெதிரேய் வந்திறுத்த ஆய் வேளை உங்குறும் பரைஉமடலமருளழித்தோட்டிக் காட்டுக் குறும்புசென்றடைய நாட்டுக் குறும்பிற்செருவென்று மறைகடல் வளாகமொரு மொழிக் கொளிஇய, சிலைமலிதடக்கைத் தென்னவானவன் அவனே

நிரை உறுமலர் மணிநீண் முடிநெரிய கோன்னெடுஞ்சடையமற வன்றன் ராஜ்பவத்ஸலன் மூன்றுவது செலாநிற்ப ஆங்கொருநாண் மாடமாமதிற் கூடற்பாடு நீத்தவர் ஆக்ரோதிக்க கொற்றவனேய் மற்றவரைத் தெற்றென நன்கு கூவி, என்னேய்நுங்குறை என்று முன் ணுகப் பணித்தருள மேனுணின்குரவராற்பான்முறை இன்வ முவாமை மாகந்தோய்மலர்ச்சோலை பாகலூர்க் கூற்றுத்துப்படுவது ஆள்வதானை அடல்வேந்தேய் வேள்விகுடி என்னும்பியருடையது ஒல்காதவேற்றூனை ஒடோதவேலி உடன்காத்த பவ்யாகமுதுகுடுமிப் பெருவழுதி

---

என்னும் பரமேஸ்வரனுற் வேள்விகுடி என்னப்பட்டது கேள்வியிற்ற ரப்பட்டதனைத் துளக்க மில்லாக் கடற்ருனையாய் களப்பரரால் இறக் கப்பட்டது என்று நின்றவன் விஞ்ஞாபஞ் செய்ய நன்று நன்றென்று முறுவலித்து நாட்டானின் பழமையாதல் காட்டிநீ கேளென்று நாட்டிற்றன்.

பழமையாதலை காட்டினுறங்கப்பொழுதேய்காட்ட, மேனுளை நங்குர வராற்பான் முறை இற்றரப்பட்டதைஎம்மானுந்தரப்பட்டதென்று செம்மாந்தவனெடுத்தருளி, விற்கைத் தடக்கை விறல்வேந்தன் கொற் கைகிழான் காமக்காணிநற்சிங்கற்குத் தேரோடுங் கடற்ருனையான் னீரோடட்டிக்கொடுத்தமை இன் மாற்றிதற்குப் பெருநான்கெல்லை தெற்றென விரித்துரைப்பிற் புகரறுபொழின்மருங்குடுத்த நகரூரெல் லைக்கும் மேக்கும், மற்றிதற்கு தென்எல்லை, குளந்தைவங்கூழ்வந்தை சைக்குங்களந்தைக் குளத்திலாலுக்கு வடக்கும், மற்றிதற்குமேலெல்லை அற்றிமில்லாக் கொற்றண்புத்தூர்ரொடுமைய்இருப்பைச் செய் இடை மேற்றலைப் பெருப்பிற்குக் கிழக்கும், மற்றிதற்குவடபா லெல்லை

காயலுட் கமலம்மலரும்பாயலுள் வடபாலைப் பெருப்பிற்குத் தெற்கும் இவ்வியைதபெரு நான்கெல்லையிற்பட்ட பூமிகாராண்மை மியாட்சி உள்ளடங்க மேலெங்குரவாராற்குடுக்கப்பட்ட பரிசேய் எம்மாலுங் கொடுக்கப்பட்டது. மற்றிதற்காணத்திகுற்றமின்றிக் கூறுங்காலைக் கொங்கரவந்த றுங்கண்ணிக் கங்கராஜனது கன்னியாரத்னம் கொங்கர் கோற்குக் குணந்து கொடுப்ப, ஆர்ப்பரு அடற்ருனைப் பூர்வராஜர் புக்ன்றெழுந்து வில்லிரவுங் கடற்ருனை கல்லகனை வெண்பைவாய், ஆளமருள்ளழிந்தோடவாளமருளுடன் வவ்விய எனப்பொறி இகல மருளிடி உருமென வலனேந்தீமானத்தானை மதபீகளன் மன்னர்கோன் அருளிற் பெற்றுங் கோல்வளைக்கும் வேற்ருனைப் பல்வளைக்கோன் குணாப்பட்டும் பொரவந்தவர் மதந்தவிர்க்குங் கரவந்தபுரத்தவர் குலத்தோன்றல் மாவேந்துங் கடற்ருனை மூவேந்த மங்கலப் பேரரை யனுகிய, வைத்தகசிகாமணி மாறங்காரி இப்பிரமதேயமுடையகொற் கை கிழான் காமக்காணிசுவரஞ்சிங்கன், இதனுள் மூன்றில் ஒன்றுந்

தனக்கு வைத்திரண்டு கூறும் ஒம்பதின்மர் ப்ராம்மணர்க்கு நீரோ டட்டிக்கொடுத்தான் இதனுள் மூர்த்தி எயினன்சவை ஒடொத்தது நான்கரைப் படாகாரமுடையவன், இதனுட்டனக்குவைத்த ஒரு கூற் றிலுந் தம்பிமார்க்கு நான்குந் தஞ்சிற்றப்பனார் மக்களுக்கு ஆறும் சபை ஒடொத்த படாகாரங்கொடுத்தான். இப் ப்ரசஸ்தி பாடின சேனாபதி ஏனாதி ஆஇன சாத்தஞ் சாத்தற்கு மூன்று கூற்றாகுமாய்த் தங்களோடொத்த நான்கு படாகாரங்கொடுத்தார்.

மற்றினைக் காத்தார் மலரடி என்முடிமேல் என்று கொற்றவனேய் பணித்தருளித்தெற்றெனத் தாமிர சாசனம் செய்வித்தான் இஃதெ ழுதின சுத்தகேசரிப்பெரும்பனை காரனுக்கு பெருமக்கள் அருளாற் பெற்றது ஒரு இல்லவளாவும் இரண்டுமாச்செய் ஒருபுன்செய்உம் பெற்றான் இவை யுத்தகேசரிப்பெரும்பணைகாரனெழுத்து.

---

# வீரபாண்டியனின் சிவகாசிச் செப்பேடுகள்.

## தமிழ்ப்பகுதி.

சந்திரனது வழித்தோன்றி இத்தராமண்டல முழுதாண்டு பண் டிந்திரன் முடி வளையுடைய்த்து மிமையத்துக் கயலெழுதியும் ஆனை யாயிர மைய்யமிட்டு மகத்தியனொடு தமிழ் தெரிஞ்சும் வானவர்க்குத் தூது சென்று மகல்கடலின் வரவு மாற்றியு மீண்டிய வக்கடல் கடைந்து மின்னன பலதிறல் செய்த பாண்ட்யபரமேஸ்வரரான் பரம்பரையில் வந்து தோன்றினவள் மன்னவர்கோன் இராசமல்லன் மணிமுடி மானுபரணன் றென்னவர்கோன் மற்றவற்குச் சேரலன்றன் மடப்பாவை சீர்திகழு மணிபயிலிச் செழுநிலந் தொழ வெளிப்பட்ட வீரகேரளன் வீரபாண்டியன் விநையகஞ்சுகன் விசாலசீலன் றன்னு டைய குலம்விளங்க தண்டேய தமிழ்க்கூடலில் மன்னிய மணிமுடி கவித்து மகாபிஷேக மகிழ்ந்த நாளில் மேதகு சாசனஸ் லோகம் விதி கிடந்தவா செய்யவல்ல பூசுரமத்திவன்னது தன் பூம்பொரு நம் புடைவர்க்குஞ் சீர்திகள் தரு முள்ளிநாட்டுத் தென்வீரதரமங்கலத் தேர்திகழும் பெருந்தன்மை ராதிதர கோத்ரித்தி வளப்பரிய பேரொ முக்கத் தாச்வலாயக சூத்ரத்து விளக்கமுறவந்து தோன்றி விப்ரர்க் கோர் விளக்காயின ஒருதன்மை இருபிறப்பில் முச்செந்தீ நால்வேதந் தருமரபி லேய்வேள்ளி யாறங்கத் தந்தணாளன் கோவிந்த ஸ்வாமி பட்டச்சோமாசி தன் குலவரவில் வாசுதேவ பீராமீபரபட்டனென்ற மறைவாழ்நனை மதித்தருளி நீய்செய்கென மற்றவனு மனமகிழ்ந்து விதித்தமைத்த அநுஷ்டுப் பின் விழுப்ப நோக்கி மிமகுந்து தனக்கி ரண்டா மாண்டி னதிரா மாண்டிலண்ட நாட்டு மின்னுகொடி நெடு மாட வீதி வீரபாண்டியபுரமான செல்லூரிலிருன் தருளி நலந்திகழ் மேல்வேம்ப நாட்டுநலபுரத்துக் கொப்பத்தில் கலந்தவாழை கோடுட் படக் காமருகோல் புறனுஞ்சிவா விருபூவிளைவது நீர்நிலன் மூவேலியுங் குடி இருக்க முருகூர் புடைசுற்றிய முதுனிலத்தில் பத்து மாவு மற்ற தற்கு தக்ஷிணையாக மன்னு சாசனமங்கலமென வேற்றபேருடை ஏக போக ப்ரம் ஹதேயமாய்ப் பிடிசூழ்வித்து ஊராண்மையில் வேறொன்

ருக்கி நாட்டாண்மையோ டுடன் கூட்டிக் காராண்மையு மீசாய்
சியும் முள்ளடங்க கல்ப்பனையசாசனமு மறையோலையுந் தனித்தனி
யேய் சமைப்பித்து பூசுரற்குக் குடுப்பித்திப் பூதலத்தென் புகழ் நிறுத்
தென தெழிலரும் போர்க்கூற்றக்தி விரணசிங்கமங்கலத்து செழுமலர்த்
தென்னவன் ப்ரஹ்மஸ்ரீ துங்கராஜ ஞயினவனத்தன் விண்ணப்பமாகவும்
மன்திர ஓலைநாயகன் கணையர்பள்ளி மன்னின தென்னவன் உத்தர
மந்திரி ஆயின இயக்கஞ் செல்வன் ஆணத்தி ஆகவும் ஏர் திகழ
மதிள்க்கூடல் ராஜ சிம்ஹனென்னும் பியருடைச் சீர்திகள் தமிழ்ப்
பேரரையன் திருந்ததிகாரமாகவும் அணுக்கபிள்ளை தென்பருத்திக்குடி
நாட்டுச் செழும்பொழில்சூழ் செந்நிலக்குடித்தன் குலத்தில் மேந்தோன்
றிய சடையங்காளிஉம் மாசறுசீர் வெள்ளப்பநாட்டு வடிநெடுவேல்
கேசவங் கணவதியோடுடன் கெழுதகு கண்காணி ஆகவும் பூம்பொழில்
புறத்தாய நாட்டு நற்றராயக் குடி மேம்படு சீர் அரையன் விரை
யாச்சிலைஉம் திருக்கானப்பேர் கூற்றத்துச் சிறுசேலூர்க் காடம்படா
லகனும் சோழநாட்டு மாங்குடிச் சோலை கிழவனும் விக்கிரமகாம வள
நாட்டு கண்ணனூர் இளவளம்புல்லனும் புரவுவரி ஆகவும் அனுத்தரப்
பல்லவ அரைசெனும் பியரியன்ற மாறஞ்சோலை மால்களிற்றின்
நாசகமினிதியற்ற முள்ளி நாட்டு குளத்தூர் அரையன்
திருச்சிராப்பள்ளி ஆணை ஒழுகவும் மேல் வேம்பநாட்டு
நாட்டாரும் ப்ரம்ஹ தேயக் கிழவரும் நலபுரத்து ஊராரும்
உடனின்று நிலம் அளந்து பிடிசூழ்ந்து கல்நாட்டி எல்லை
தெரிச்ச பெருநான்கெல்லைக்குக் கீழ் எல்லை மாயன் பதக்கென்னுஞ்
செய்யின் வடதலைத் துலாச்செய்க்கிறைக்குந் தேயாற் பண்ணையி
னின்றுந் தெற்குநோக்கிச் செழுங்கழனி வாழை கோட்டிதனுக்கேய்
பாய்ந்த வாய்க்காலூடேய் போந்து சூழ்புனலணி கண்ணிற்காய்
பண்ணை தன்னைத் துன்னவந்து மற்றிதனின்றும் கண்ணிற்காய் வட
தலைத் துடவைகளுக்கிறைக்கப் பாய்கின்ற சிறுகாலின் ஊடுபோந்து
கண்ணிற்காய் வடகீழ்த் தலைத் துடவைகளின் தென்வரவை நண்ண
வந்து கிழக்கு நோக்கி நாட்டுபெருங்காலில் நின்று மேதகு பராங்கு
சமங்கலத்து மேல் எல்லையின் மேவருகேய் தாதமர்பொழில் வாழை
கோட்டுப் பொழியுடேய் தண்பொருநம் எய்த வந்து தெக்கு நோக்கிப்
பாய்ந்த தனுக்கியன்ற மேக்கும் செய்தமைத்து தென் எல்லை தண்
பொருநல் வீற்றிருகழ வடக்கும் குடக்கெல்லை வன்னியோடு பொழி
யினின்றும் சூனையாமல் வடக்குநோக்கிக்களுச் செய் புகக் கல்லின் வாய்க்

காலே ஊடறுத்து வடக்கு நோக்கி அங்குற நட்ட நடுகல்லின் மாடு நின்று கிழக்கு நோக்கி வண்கணத்தா மங்கலமுடையான் வயக்கின நெடுங்கண் டுவலின் மத்திமமேய் கிழக்கு நோக்கி நயக்க வந்து வாழை கோட்டின் நாற்றங்கால் புகப்பாய்ந்த புறக் காலே நணுக வந்து கருங்குடிப் பொழியினின்றும் (.......) வேற்சாத்தன் பதக்கென்னுஞ் செய் புகப்பாய்ந்த காலே எய்தவந்தக் காலூடேய் கிழக்கு நோகிக் இனிது போந்து நெய்தலம் பனைநாட்டுப் பெருங்காலில் நின்று நின் பரவைக் கடனடுலேய் சாத்தன் பதக் கெனுஞ் செய்புகத் தணந் தகாலின் செந்நடுவேய் வடக்கு நோக்கி வந்துமற்றிதினின்று திண் டிறல் விளங்குடையான் இட்ட மண் மதிளொரகுபோந் தெழினட்டுப் பெருங்காவதனே ஒட்ட வந்ததன் கிழக்கும் மற்றதனுத்தரந்திசை ஒங் கெல்லே நாட்டுப் பெருங்காலினின்றுங் கிழக்கு நோக்கி நலவரவெ கடகிட்டம் படவணைக்கின்ற எழில்விளங்கு பேரணை உட்பட கெள கீன் பணையினின்றும் கிழக்கு நோக்கிந வாழை கோட்டுக்கேய் வந்து மாயான் பதகெக் கென்னு மஞ்செய் வடதுலாச் செய்களுக்கினிதி (.......) நம் எழிற்பண்ணையின் நெற்க்கும் மற்றிவை எல்லேயாகத் தனி (.......) றைக் கடன் ஈழக்கழஞ்சு ஈரேழுதான்பகுத்து உண்ணிலம் ஒழி வின்றி (.....)கேழ் விளங்கச் செய்தனன்னூர் மோயம்பில் அவநிகாந்தநே

---

# சுந்தர பாண்டியன் கல்வெட்டு

1. ஸ்வஸ்தி ஸ்ரீ பூமருவிய திருமடந்தையுஞ் புவி மடந்தையும் புயத்திருப்ப நாமருவிய

2. கலைமடந்தையுஞ் செயமடந்தையு (ம்) தல (ஞ்சி) றப்பக் கொளாந்தசினப்புலியுங் -

3. கொடுஞ்சிலையுங் குலேந்தொளிப்ப வாளார்ந்த பொற்கிரி மேல் (வரி)க் கயல்கள்

4. விளையாட இருங்க (ட) ல் வலயத் தறம் பெரு (கக் கரு) ங்கலி கடிந்து செங்கொல் நடப்ப ஒரு கு -

5. டைநிழலருநிலங்குளிர மூவகைத் தறம் முறைமை (யில் விள) ங்க நால்வகை வெதம (ம்) (ந்வின்றுடன்)

6. வர ஐப்வகை (வெ) ழ்பியுந் செய்வினைபிபற்ற அறுவகைச் சமயமு மழகுடத் திகழ எழ

7. வகைப் பாடலுமியலுடந் பாவ எண்டிசையளவுஞ் சக்கரஞ் செல்லக் கொங்கர் கலிங்கர் ெ -

8. காசலர் மாளுவர் சிங்களர் தெலிங்கர் சினர்குச்சரர் வில்லவர் மகதர் விக்கலர் செம்மியர் பல் -

9. லவர் முதலிய பார்த்திவரெல்லா முறைவிட மருளெந் ஞெருவர் மு (ந்) ஒருவர் முறை முறை கடவ

10. தந்திறை குணந்திறைஞ்ச இலங்கொளிமணிமுடி இந்திரன் பூட்டிய மொவங் கதிராரமா -

11. ர்பினிற் பொலிப பனிம (ல) ர்த் தாமரைத் திசைமுகந் படைத்த மனுநெறி தழைப்ப

12. மணிமுடி சூடி விளங்கிய மணிபணி வீரசிங்காசநத்து வளங்கெழு கவரி இருமருங்கசைப்ப-

13. க் கடலென முழங்குங்கரி நல்லியானை வடபுலவெந்தர்த மணி புயம் பிரியா இலங்கி-

14. ழையரிவையர் தொழுதுநின்றெத்த உலகமுழுதுடையா ளோடும் வீற்றிருந்தருளிய ஸ்ரீ கொ-

15. மாறபன்மராந திரிபுவன சக்கரவர்த்திகள் சொஞூடு கொண் டருளிய ஸ்ரீசுந்தரபாண்டிய

16. தெவற்கு யாண்டு 3வது பிரஸாதஞ் செய்தருளின திருமுகப்படி கானஞுடான விருதராஜ பய-

17. ங்கர வளநாட்டுத் துறுமா நாட்டுத் திருநாவலூரும் அனுமன் தாயான அஞ்சன மங்கலமும் முன்பு

18. இறுத்து வருகிற இறையிலெ உலகுடைய நாயஞர் திருமெ னிக்கு நன்ருக இலெசு பெறவெணுமன்-

19. று பிள்ளையார் அழகப் பெருமாள் நாயஞர்க்கு விண்ணபஞ் செய்து நினைப்புமிட்டு நி(ரு)ம் வார்த்துத்த--

20. ருவித்தருளின பிரஸாதஞ் செய்தருளின திருமுகப்படி பயி ரெழுத முதல் கொண்ட நிலத்துக்கு மாத்தாலி-

21. ருகல நெல் தாழ்த்து மாத்தால் ஐங்கலனெ தூணிப் பதக்கு நாஞழி நெல்லி விறுப்பதாகவும் இவ்

22. வூர்களில் நிரிவிநிலமாய் வரிசைப்படி இறுத்து வருகிற நிலங் களுக்கு மாத்தால் முக்கலனெ இருதூணி மு-

23. க்குறுணி முவுழக்கு நெல் இறுப்பதாகவும் நவிரை இன்னெல்லி லொன்று முக்காலிறுப் பதாகவு(ம்)

24. வரகு இன்னெல்லி (ல்ஒ) ன்று பரதி இறுப்பாதகவும் எள்ளுந் தினையும் இன் நெல்லில் நான்கொன்று இறுப்-

25. பதாகவும் உலகுடைய நாயஞர் எழுந்தருளிஞல் திருவெழுச்சிக் குடிமை முதலாக நாடென்ற வரிகள் எப்-

26. பெர்பட்டனவும் ஒன்றுபாதி இருப்பதாகவும் வெட்டி முட்டை ஆள் செயாதிதாகவும் பிரஸா-

27. தஞ்செய் தருளின திருமுகப்படி திருநாவலூரர்க்கு (ம்) அனுமன் ருயான அஞ்சன மங்கலத்துக்-

28. கு இறுக்கும்படி கல்வெட்டிக் குடுத்தென் அவனி நாராயண தெவநென் கவஸ்திஸ்ரீ

இருக்குமிடம்: புதுக்கோட்டை இரர்ச்சியத்தில் திருமய்யம் தாலூ காவில் உள்ள கண்ணனூர் பாலசுப்பிரமணிய சுவாமி கோயிலின் கருப்பக் கிருகத்தின் வடபுறச் சுவரில் இருக்கின்றது.

# அரிகேசரி பராக்கிரம பாண்டியர் பாடல் கல்வெட்டு

1. சுபமஸ்து உ அன்பினுடன் சகாத்தமாயிரத்து முன்னூற்றறுபத்
2. தெட்டதன்மேல் வைய்காசித் திங்கள் மன்தியதியிரைந்திற் பூறு-
3. வபக்க மருவு தெசமியில் வெள்ளி வாரந்தன்னில் மின் திகழுத் திரநாள்
4. மீனத்தில் வாகைவே வரிகேசரி பராக்கிரம மகிபன் நென் திசை யிற்கா-
5. சிநகர்க்கோயில்காணச் சென்று நின்று கர்ழ்சணை தான் செய்வித்
6. தானே உ (1) அடைவுதிகழ் சகாத்தமாயிரத்து முன்னூற் றறுபத்
7. தொன்பதின் மேற்செல் மிதுன ஞாயிற்றிடை மருவுதி யதி பதி (னெ) -
8. ..........ஸிற் சனிவார (மதனில் மீனத்தில் மன
9. ..............
10. டையவரைத் தென்காசிச் சிவாலயத்தினுள்ள மைத்துத் தெள் ளமுத மூட்-
11. டினனே உ (2)
12. பன்னு கலியுக நாலாயிரத் தைஞ்ஞுற்றைம்பத்தெட்டின் மேலே, வரும் பணிந்து போற்ற (ச்)
13. சென்னல்வயற் தென்காசி நகரில் நற்காத்திகைத் திங்கள்த்திய தியைந்திற் செம பொன் வாரம -
14. ன்னிய மார்கழி நாளில் மதுரைவேந்தன்வடிவெழு தொணுத பராக்கிரம மகீபன் சொன்னவரை
15. போற் திருக்கோபுரமுங் காணத் துடியிடையாயுபான முதல் துடக்கினனே உ (3) ஏராருஞ் சகா-
16. த்த டீர்யிரத்து முன்னூற்றெழுபத் தொண்பதின் மேற்காத் திகை மாதத்திற் சீராருந்-

17. தியதி யைந்திற் குருவாரத்திற்சிங்க மிகுற்த்தத்தில் மிறுக சீரிஷத்

18. தன்னில ரனருளால் வழுதி பராக்கிரம மகிபன் சூரா-

19. பானமுதல் கொட்டினுனே உ (4)

20. சேலேறிப வபற் தென்காசி யாலேயந் தெய்வ செயலாலே சமைந்த திங்கென்

21. செயவல்ல வதனேயின்ன மேலே விரிவுசெய்தே புரப்பாரடி வீழ்ந்தவர்-

22. தம்பாலேவல் செய்து பணிவன் பராக்கிரம பாண்டியனே உ (5) மனத்த (ர)ல்

23. வகுக்கவு மெட்டாத கோயல் வகுக்கமுன் (னி)ன் றெனேத் தாள் பணிகொண்ட-

24. நாதன் தென்காசியை யென்று மண்மேற் நினேத்தா தரஞ் செய்து தங் காவல்

25. பூண்ட நிருபர் பதந்தனேத் தாழ்ந்திறைஞ்சித் தலேமீதியானுந் தரித்தனனேஉ (6)

26. பந் தண்பொழில் புடைசூழுந்தென் (காசியை) பூதலத்திற் தாந் தங்கிளேயுட-

27. னே புரப்பார்கள் செந் தாமரை (யாள் காந்) தன் பராக் கிரமக்கை (ய்) த

28. வன் மான கவசன் கொற்கை வேந்தன் பணிபவராகி யெந் நாளும் விளங்கு-

29. வரே உ (7) காண்டகு சீர் புனே தென்காசிக் கோபுரக் கற்ப ணியாருண்டில் முடி-

30. த்துக் கயிலே சென்ருனகிலேசர் பதம் பண்டுறை சிந்தை யரி கேசரி விந்தை-

31. ப் போர் கடந்த பாண்டியன் பொன்னின் பெருமாள் பராக்கி ரம பாண்டியனே உ (8)

32. ஆராயினுமிந்தத் தென்காசி (மேவும்) பொன்னுலேயத்து வாரா

33. ததோர் குற்றம் வந்தாலப் போதங்கு வந்ததனை நேராகவே-

34. யொழித்துப் புரப்பார்களை நீதியுடன் பாராரறியப் பணிந்தேன்

35. பராக்கிரம பாண்டியனே உ (9) அரிகேசரிமன் பராக்கிரம மாறனரனருளால்

36. வரிசேர் பொழிலணி தென் காசிக்கோயில் வகுத்து வலம்புரி சேர் கடற்புவி

37. போற்ற வைத்தேனன்பு பூண்டிதனைத் திரிசேர் விளக்கெனக் காப்பார் பொற்-

38. பாத மென் சென்னியதே உ (10) சாத்திரம் பார்த்திங் யான் கண்ட பூசை-

39. கள்தாம்நடாத்தியேத்தியன்பால்விசுவ நாதன் பொற் கோயிலே

40. ன்றும் புரக்கப் பா(ர்)த்திபன் கொற்கைப் பராக்கிரம மரறன் பரிவு-

41. டனங் கோத்திரத் தன்னிலுள்ளார்க்கு மடைக்கலங் கூறினனே உ (11)

42. மென் காசை மாமலரன்ன மெய்யோர்க்கும் விரிஞ்சனுக்கு-

43. ம் வன் காசு தீர்த்திடும் விச்சுவ நாதன் மகிழ்ந்திருக்கப்-

44. பொன் காசை மெய் யெ(ன்று தொட்) ட கைக்கு மிப்பூதல-

45. த்துத் (தெ) தன் காசி (கண்டபெருமான்பராக்கிர)மத் தென்ன வனே உ (12)

46. (ஏ)ரார் சகாத்த முந்நூற்றுடனுயிரத்தெ (தண்பத்) தஞ்சிற் சீராரு மார்கழி-

47. (சி)த்(திரைநா) ளிற் (சிறந்த குற்றம் வமராத பூரணை யி) னிற் பராக்கிரம மாறனெ-

48. ....——....ரா... ரகயிலாயந்தான்....கண்டனனே உ (13)

49. கொதற்ற பத்தி யறுயத்துமூவர்தங் கூட்டத்திலோ நீதற்(ற) வெள்ளிச்(சி)லம்

50. பகத்தோ செம்பொனம் பலத்தோ வேதத்திலோ சிவலோ கத்திலோ
51. விசுவநாத னிருபாதத்திலோ சென்றுபுக்கான் பராக்(கி)ரம பாண்டியனே உ (14)
52. ஓங்கு நிலை யொன்பதுற்ற திருக்கோபுரமும்
53. பாங்கு பதினென்று பயில் தூணுந்தேங்குபு-
54. கழ் மன்னர் பெருமான் வழுதிகண்ட தென்-
55. காசி தன்னிலன் றியுண்டோ தவத்து உ (15)
56- அணிகொண்ட விந்த வணங்கெுமா-
57. ன்றே யடியேற் குணக்கு மணி
58. கொண்டவாசல் பணியும்
59. ஒன்றே பகை மன்னரை-
60. யும் பிணி கொண்ட காரை(யு)-
61. முந்நீரையும் பெரும்பூதத்-
62. தையும் பணிகொண்ட செண்ப-
63. க(த்)தென்னு பராக்கிரம பாண்டியனே உ (16)

இருக்குமிடம்: திருநெல்வேலிச் சில்லா, தென்காசி விசுவநாதர் கோயிலின் முன்பு, இடிந்த நிலையில் உள்ள கோபுரத்தின் சுவர்களில்.

# சுசீந்திரம் கல்வெட்டு

## திரு. தொல். தொர்குதி. பகுதி 2. எண். 3.

இது சுசீந்திரம் ஸ்தானுநாத ஸ்வாமி திருக்கோயில் முதல் பிர காரத்துக் குன்றில் உள்ளது. ஸ்வஸ்தஸ்ரீ பூமடந்தையும் ஜெயமடந் தையும் பொலிந்து திருப்புயத்திருப்ப பார் முழுதும் புடைநிழற்ற பராக்கிரமத்தால் முடிசூடி தென்மதுராபுரி திருவிளையாட்டத்தில் கண்டு மன்னரெல்லாம் வந்திறைஞ்ச மலைநாடு கொண்டருளி மா பாரதம் பொருதருளி மன்னவற்கு தூது சென்றருளி தேவாசுர மதுகை தரித்தி தேனுரும் மறையும் கொண்டருளி வடவரையில் கயல் பொறித்து வானவர்கோன் ஆரம் பூண்டு திடவாசகக் குறுமுனி பால் செந்தமிழ்நூல் தெரிந்தருளி தளிர் இருங்கை மாதுரிமைச் செங் கோலெங்குந் திசை நடாத்தி மன்னிய வீரசிம்மாசனத்தில் தீரை லோகீயம் முழுதுடையாரோடும் வீற்றிருந்தருளி மாமுதல் மதிக்குலம் விளக்கிய கோமுதல் கொற்றவன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீவீரபாண்டிய தேவர் அபிஷேக காலத்தில் ராசிதாகோத்ரத்து ஆஸிலாயன சூத்ரத்து நாராயணன் சேந்தனுன இடையாற்று மங் கலத்து நம்பியும் திருப்புத்தூர் ஆழ்வாரும் பிள்ளையார் வீரகேரள தேவரும் உத்திர மந்திரிகள் வீரகேரள பாண்டியக் கோனும் நிற்க இடையாற்று மங்கலத்து நம்பியோடும் திருவாய் மொழிந்தருளி பெருமாளுக்கு திருவாபுஷ்யார்த்தமாக சுசீந்திர முடைய நாயனுருக்கு பெருமாள் தானம் பண்ணிக் குடுத்தருளின பூமி தென்கூற்றுப் புறத்தா நாட்டுப் பூசன் குடிப்பாலதவோடு தோட்டம் இவ்வத வோடு தோட்டத்துக்கு பெருநான்கெல்லை கீழெல்லை பாதிரித் தோட் டத்து நீர் நக்கல் தென்னெல்லை கல்குழிக்கு வடக்கு மேலெல்லை புல்லாலங் குறிச்சிக் கர்கறைவயலில் ஒற்றுவாயல் கிணற்றுக்குக் கிழக்கு வடவெல்லை கறடிக்கும்பல் கடம்புக்கு தெற்கு ஏரி இரண் டினுல் விளைநிலமும் காடுமுள்பட நிலம் ஏழுவேலி இந்நிலமேழு மவலியும் இறையிலி காராண்மையும் உட்பட சுசீந்திரமுடைய நாயி னுர்க்கு தானம் பண்ணினுர். பெருமாள் முன்னுடையாரும் பழம் பேரும நீக்கி இப்படிக்குப் பெருமாள் கல்லிலும செம்பிலும் வெட்டிக் குடுக்க வென்று திருவாய் மொழிந்தருளி திருமந்திரவோலை மூரப்பு

நாட்டு மறவனூரம்பலவன் வேளாளனை நித்தவிநோத மூவேந்த வேளாரெழுத்தினல் பிரசாதம செய்தருளிய ஸ்ரீ முகத்தினலும் ஸேனபதிகள் வெண்பைக் குடிநாட்டு இளவென்பைச் சந்திரசேக ரனை வீரபாண்டிய மூவேந்த வேளார் கடையீட்டினலும் புரவுவரி திணைக்கள நாயகம் மலைகூற்றத்து விளத்தூர் கேசவனை தென்னவ சிகாமணி மூவேந்தவேளார் எழுத்தினலும் முகவெட்டி நாயகம் செம்பில் நாட்டு அரையனேரி தாயன் பொன்னனை குறும்பில் உடையான் எழுத்தினலும் கூற்றுக் குகூறு திருவழுதிவளநாட்டு கோட்டூர்ப் பேரரு ளாளன் கற்றங்குடியான் வானவன் வழுக்கோன் ெ...... ட்டின் உள்வரி படியாலும் நிந்த விநோத மூவேந்த வேளாரெழுத்தினல் பிரசாதம் செய்தருளிய ஸ்ரீமுகத்தாலும் வீரபாண்டிய மூவேந்த வேளார் தலையீட்டாலும் பிரவுவரியாரெழுத்திட்ட உள்வரியாலும் இக்கால முதல் திருப்படிமாற்று உள்ளிட்டன செலுததுவாராகச் சொன்னோம் சுசீந்திரமுடைய நாயனார்க்கு

---

# விஜயநகர மன்னன் வீரபிரதாப சதாசிவராயர் காலத்துக் கல்வெட்டு

ஸேதுவந்யே சகஸ்யாப்தே ஸ்ரீமான் வேங்கடதேசிக: சிந்தாமணி மகாக்ராமம் ஸ்ரீரங்கேஸாயிய தத்வாந். சுபமஸ்து ஸ்வஸ்திஸ்ரீ ஸ்ரீ மன்மஹா இரா.........இராஜஇராஜ பரமேஸ்வர ஸ்ரீவிரப்ரதாப ஸ்ரீ மன் சதாசிவ இராஜ மஹாஇராயர் ப்ருதுவிராஜ்யம் பண்ணி அருளாநின்ற சகாப்தம் 1467 இதன்மேல் சொல்லா நின்றி விஸ் வாவசு சம்வத்சரத்து பால்குணமாசத்து சுக்ல பக்ஷத்து சப்தமியும் சோம வாரமும் பெற்ற ரோஹிணி நக்ஷத்ரத்து தென்கரை பாண்டி குலாசனி வளநாட்டு விழாவரு(வீதி) வளநாட்டு திருவரங்கந் திருப்பதி ஸ்ரீரங்கநாத தேவர் ஸ்ரீபண்டாரத்துக்கு ஸ்ரீஸைவபூர்ணு சார்ய தாதாசார்யரான ஔக்குத் திருவேங்கடயங்கார் சிலாசாசனம் பண்ணி சமர்ப்பித்தபடி தென்கரை இராஜகம்பீர வளநாட்டு தஞ்சாஊர் உசாவடி உறையூர் கூற்றத்து கீழ்பலாற்று தேவதானத் துக்கு மேற்கு திருச்சிராப்பள்ளி மண்கோட்டைக்கு வடக்கு கிருஷ் ணராய அலவந்தபுரம் உறையூர் வெட்டிக்கு கிழக்கு திருக்காவேரிக்கு தெற்கு இன்னுஞ்செல்லைக்குள்பட்டு முன்னுள் திருவரங்கன் திருப்பதி பிடாகையாக்கி பின்பு நலந் திகழ் நாராயண ஜீயர் திருவரங்கன் திருப்பதியை யாறுகொள்ளுகிறது கண்டு மேல்முகம் ஆனைக் காத்தான் கரைக்கு யந்ரஸ்தாபனமும் பண்ணி சாஸ்தாவையும் ப்ரதிஷ்டித்து கிழியாறுங் கிழித்து தென் திருக்காவேரி மலடு செய்வித்து மலடனுறு கெட வடகரை நாணல் நடிவும் கிழியாற்றுக்கு தென்கரைஞணல் நடாமல் சிந்தாமணியில் இடங்கெடுக்கவும் கட்டளைஇட்டு சிந்தாமணி மஹாஜனங்களுக்கு கொளகுட்டை க்ராமம் பரிவர்த்தனை பண்ணிக் கொடுக்கையில் சோழன் அழைப்பித்து சந்நியாசியானவன் ஸர்வபூத ஸௌ கார்த்த முண்டாய் இருக்கவேண்டி இருக்க இப்படி ப்ரா ம்ஹண உறிம்சை பண்ணலாமோ என்று சேழ்க ப்ராம்ஹண உறிம் சைக்கு ஆக்ஞை இடுகிறது பரதேவதை தானே..... நிமித்தக்ருதம் பாபம் தர்மாய கல்பதே என்று ஸ்ரீபகவத் கீதையிலேபி சொன்னது கண்டு செய்தோங் காணுமென்ன அது கேட்டு சோழன் சந்தோஷித்து இதுவே நினைவாநால் இந்தப் பாவம் அடிக்கழஞ்சு பொன் பெறுமென்று

ஸ்ரீஇரங்கநாததேவர்க்கு தாரைவாத்து கொடுத்ததுக்கு பின்பு நெடு நாளைக்கு மேலாகச் சில காலம் பண்டார வாடையாய் திறந்து போன சிந்தாமணி க்ராமம் சக்கு தானமாநியம் நிலம் நஞ்செ நிலம் 71/4-1/10 புஞ்செ நிலம் (7)3/4 ஆக நிலம் 141/10 இதுக்கு பொன் 146 சிந்தாமணி நத்தம் செய்த்தலைத்திடர் வாஸ்து வாஸ்துஸேஷம் ஆறு ப்ராப்தி வெள்ளாங்குடி இருப்புக மற்றும் எப்பேர்பட்ட சகல சமுதாய ப்ராப்தியும் உட்பட நிதி நிக்ஷேப ஜல பாஷாணாதி அஷ்டபோக தேஜ ஸ்வாம்யங்களும் உள்பட நமக்கு நம்முடைய ப்ரிய சிஷ்ய நாய ஸ்வஸ்தி ஸ்ரீமந்மஹாமண்டலேஸ்வரஸோம குலதில காயமான நான் இராமஇராஜாசதாசிவராய மஹாஇராயர் கையில் ஏகபோக்யமாய் தாரை வார்பித்து தருகையில் நான் பூர்வன் நலந்திகழ் நாராயண ஜீயர் இட்ட கட்டளைப்படியிலே பெருமாளுக்கே பொலிஊட்டாக இராயற்கும் இராஜாவுக்கும் தர்ம்மமாக சமர்பித்து இந்த கிலோத்தாரணம் பண்ணின க்ராமத்தில் உபையங் கொண்டு பெருமாள்தினம் நாலு தளிகை அமுது செய்தருளி இதில் நிபத்திக் கட்டளை அற்றபடி விட்டவன்விழுக்காடு சதுர்தாம்ஸம் நாலு தளிகையிலே ஒரு தளிகையும் ஒளக்கு திருவேங்கடயங்காங் சந்தாநபரம்பரை ஆக சந்ராதித்யவரையும் அனுபவித்துக் கொண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் அமுது செய்தருளும்படிக்கு நடக்கக் கடவதாகவும் இப்படிக்கு இந்த சிலாசாசன மெழுதின மைக்கு கோயில்க் கணக்கு ஸ்ரீரங்கநாராயண ப்ரியன் எழுத்து.

---

# பிரணயபத்திரிகை

*தென்னிந்திய கோயிற் சாசனங்கள் பாகம்-I*

பொருப்பன்ன மாடம் பொலிந்து தோன்றும் புதுவையர் கோன் விஷ்ணு சித்தன் கோதைக்கு நாம் வரக்காட்டின பிரணயபத்திரிகை

பத்தர்களும் பகவர்களும் பழமொழி வாய்
முனிவர்களும் பரந்த நாடுஞ்
சித்தர்களும் தொழுதிறைஞ்சத் திசை
விளக்காய் நிற்கின்ற

நல்லார்கள் வாழு நளிர ரங்கப் பெருநகருள் நம் வீட்டில் சேரனை வென்றான் மண்டபத்துச் சுந்தர பாண்டியன் பந்தல் கீழ் அரியராயன் கட்டிலில் இருந்து உம்பரும் தும்புரு நாரதர் வந்து முகம் காட்ட அவர்களுக்கு அழகோலக்கம் கொடுத்து இருக்கச் செய்தே, நம் வீட்டில் குடவர் கோவணவர் பூவிடுவர் தழைவிடுவர் தண்ணீர் சுமப்பர் தண்டெடுப்பார் அணுக்கர் கணக்கர், மற்றும் நம் காரியத்துக் குக் கடிவர் எல்லோரும் வந்து நம் கோதை வீட்டினின்றும் அர்ச்சகர், குடவர், கோவணவர் தண்டெடுப்பார் ஸ்ரீராமாநுஜ உடையார் வந்தார்களென்று நாமும் சர்வ பரிகரமும் அனைத்துக் கொத்துள்ளா ரையும் எதிரே போகவிட்டு, தம் வீட்டில் உள்ளாரையும் கூட்டிக் காண் பித்துக் கொள்ளும் அடைவிலே காண்பித்துக் கொண்டு தாம் வரக் காட்டின சம்மானமும் சுவீகரிக்கும் அடைவிலே சுவீகரித்தோம். தாம் வரக் காட்டின சாசனமும் வாசித்துக்காட்ட அறிந்து கொண்டோம் தாம சொல்லிவரக் காட்டின சாசனமும் வாசித்துக் காட்ட அறிந்து கொண்டோம். தாம் சொல்லிவரக் காட்டின படியாவது: நாம் பதினாறு மாயிரவர் தேவிமாருடனே பெரிய மண்டபத்திலே விநோதித்திருந்தோ மென்று தம் சுற்றத்துத் தோழிமார் தமக்குச் சொல்ல அப்பொழுது தாம் புண்ணிற் புளிபெய்தாற் போலேயும் வேலால் துன்னம் பெய்தாற் போலேயும் நெஞ்சூடுருவ வேவுண்டு நிலையும் தளர்ந்து.

கொள்ளும் பயனொன் றில்லாத கொங்கை
தன்னைக் கிழங்கோடும்
அள்ளிப் பறித்திட்டவன் மார்பிலெறிந்
தென்னழலைத் தீர்வேனே

என்றும் உள்ளே யுருகிநைந்து தாம் நம்மைப் பொருத்தமிலியென்றும் புறம்போல் உள்ளுங் கரியான் பெண்ணின் வருத்தமறியாத பெருமான் வஞ்சகக் கள்வன், மாமாயன், பாம்பணை யார்க்குந் தம் பாம்பு போல் நாவுமிரண்டுளவாய் (த்து) நாணிலியென்றும் தாய் சொல்லிவரக் காட்டினது தாம் மாமிமார் மக்களாகையாலும் நாம் மாமனார் மக்களாகையாலும் நந்திறதூடல் கண்டுவப்ப வேண்டிச் சொன்னதாயி ருக்கும் நாம்முப்பத்து மூவர மாரர்க்கு முன் சென்று கப்பந் தவிர்ப்பது காரியம் ஆகவும் தேவ ரகசியமாகவும் பெரிய மண்டபத்தில் இருந் தோம். தாம் மணவாளர் வைத்த பரிசிலே யிருந்தோமென்றும் நாங்க ளெம்மி லிருந்தொட்டியகச் சங்கம் நானுமவனு மறிந்து மென்றும்.

> பாசி தூர்த்துக் கிடந்த பார்மகட்கு, பண்டு ஒருநாள்
> மாசுடம்பில் நீர் வாரா மானமிலாப் பன்றியாம்
> தேசுடைய தேவர் திருவரங்கச் செல்வனார்
> பேசியிருப்பனகள் பேர்க்கவும் பேராவே

என்றும்

> திண்ணார்ந்திருந்த சிசுபாலன் தேசழிந்து
> அண்ணாந் திருக்கவே யாங்கவளைக் கைப் பிடித்த
> பெண்ணாளன்

என்றும் செம்மையுடைய திருவரங்கரென்றும் சொன்னபடியே நாம் தம்மை யல்லது வேண்டுவதில்லை தம் வீட்டில் உள்ளவர்களைத் தூட்க நிறுத்தி நில்லாமல் வரக் காட்டச் சொன்னபடியே அவர்களுக்கு வேண்டும் ஸத்காரங்களும் செய்து தமக்கு நாம் என்றும் பல்லக்கும் நாம் இருக்கும் குடையும் நாம் பூணும் கண்ட மாலை ஆபரணங்களும் பட்டு பருத்தி ஸுகந்த திரவியங்களும் வேண்டுமதும் கொடுத்து, தமக்கு அடுக்களைப் புறமாக நமக்குப் பூர்வம் நடந்து வருகிற சீர்மையில் விட்ட சகாப்தம்

மெல் செல்லா நின்ற ஸ்ரீமுக வருஷம் மீன ஞாயிற்றுப் பூர்வ பக்ஷத்து ஏகாதசியும் புத வாரமும் பெற்ற உத்திரத்து நாள் உறங்கா வில்லி தாஸன் ஆன மஹாபலி வாணதராயர் சீர்மையான மதுரை மண்டலத்து முட்டநாட்டுத் திடியன் ஆன ; திருவரங்கநல்லூர் எல்லை யாவது; மேலெல்லை புத்தூர் மலைக்கும் வயிரவன் பற்றுக்கும் கிழக்கு. வடவெல்லை வாரந்தூர்ப் பற்றுக்குத் தெற்கு. கீழ் எல்லை

கருமத்தூரில் குளத்துக்கு மேற்கு தென்னெல்லை புளியஞ் சோலைக்கும் குத்துக்கல்லுக்கும் வடக்கு. இந்நான்கெல்லைக்கும் உள்பட்ட மாவடை மரவடை பட்டடை பதிமுதல் மற்றும் எப்பேர்ப்பட்ட சமஸ்தப் பிராப்திகளும் கைக் கொண்டு கல்லிலும் செம்பிலும் வெட்டிக்கொள்ளவும் இப்படிக்குத் திரிவாய் மொழிந் தருளினமைக்கு அருளால் திருமந்திர ஓலை நாயகம் ஸ்ரீரங்கநாதப்பிரியன் எழுத்து.



# பாண்டிய நெடுஞ்செழியனின் மீனுட்சிபுரக் கல்வெட்டு

1.- கணிய் நந்தஅ ஸிரிய் இகுவ்அன் கே தம்மம் இந்தஅ நெடுஞ் செழியன் பணஅன் கடல்அன் வழுத்திய் கொட்டுபித்தஅ பளிஇய், 2. கணிய் நந்த ஸிரிய்குஅன் தமம் இத நெடுஞ்செழியன் ஸலகன் இளஞ்சடிகன் தந்தைய் சடிகன் செஇய பளிய். 3. கணிஇ நத ஸிரிய் குவ....வெள்அறைய் நிகமது காவிதிஇய் கழிதிக அந்தைஅ ஸ ு தன் பிணஊ கொ பிதோன் 4. சந்தரிதன் கொடுபீதோன் 5. வெள் அறை நிகமதோர் கொடிஓர்



# சங்ககாலச் சேரர் கல்வெட்டு

புகளூருக்கு அருகில் ஆர்நாட்டர் மலையில் உள்ளது

வடபுறமுள்ள கல்வெட்டு: 1. ஞகன் மகன்னங்கீரன். தென்புறக் குகையிலுள்ள கல்வெட்டு: 2. (அ) மூதா அமண்ணன் யாற்றூர் செங்காயபன்...(ஆ) கோஆ....வ்விரும்புறை மகன் பெருங்(இ) கடுங் கோன் மகன் கடுங்கோன் ளங்கடுங் (ஈ) கோளங்கோ ஆக அறுபித கல் 3(அ) தா அமண்ணன் யாற்றூர் செங்காயபன் உறைய் (ஆ) கோஆதன் செல்லிரும்பொறை மகன் (இ) பெருங்கடுங்கோன் மகன் ளங் (ஈ) கடுங்கோ ளங்கோ ஆசி அறுத்த கல். 4. கொற்றந்தை ளஎய் மூன்று

---

# நடு கற்கள்

## 1. முதலாம் மகேந்திரவர்மனின் தண்டம்பட்டு நடுகல்

கோவிசைய மயீந்திரபருமற்கு பதின்எட்டாவது மீவேணாட்டு ஆந்தைபாடி ஈசை பெரும்பாணரைசரு மருமக்கள் பொத்சேந்தியாரு சேவகரு தொறுக்கொண்ட ஞான்று மீட்டுபட்டான் வேணாட்டு நந்தியார் கல்க...

## 2. முதலாம் மகேந்திரவர்மனின் எடுத்தனூர் நடுகல்

கோவிசைய மயிந்திரபருமற்கு முப்பத்து நான்காவது வாணகோ அரைசருமருமக்கள் பொற்றெக்கைஆூர் இளமகன் கருந்தேவக்கத்தி தன்னெருமைப்புறத்தே வாடிபட்டான் கல் கோவிவன் னென்னுந் நாய் இருகள்ளனைக் கடித்து காத்திருந்தவாறு.

## 3. இரண்டாம் நரசிம்மவர்மனின் தா. வேளூர் நடுகல்

கோவிசைய நரசிங்கபருமற்கு இரண்டாவது வாணகோஅ அதிரைசர் சேவகர் மீகொன்றைநாட்டு மேல்வேளூர் ஆளும் பனையமாரியார் இவ்வூர்த் தொறுக்கொண்ட ஞான்று பட்டார்.

# நடு கற்கள்

## 1. கம்பவர்மனின் சின்னையன்பேட்டை நடுகல்

ஸ்வஸ்திஸ்ரீ கோவிசைய கம்பபருமற்கு யாண்டு மூன்றாவது வயிர மேகவாண கோவரையர் சேவகன் மீகுன்றை ஞாட்டு மலையனூருடைய செம்பத் தொண்டன் மகன் காரிப்பெருமான் பாசாற்றெருமைத் தொறு எயினுட்டார் கொள்ளப் பாசாற்றூர் பூசலிடப் பூசல் சென்று கோவூர் நாட்டுச் சிற்றிடையாற்று முககொன்றை மூக்கின் மீமலை அயங்கயக்கரையிற் சென்று முட்டி மலையனூருடைய செம்பர் மகன்னுன காரிப்பெருமான்ணன் உரையிலம்புமாள எவ்விப் பத்திரமுகுவி எதிரே சென்று பட்டான்.

## 2. கம்பவர்மனின் திருவான்மூர் நடுகல்

ஸ்ரீகம்பபருமற்கு யாண்டு இருபதாவது பட்டை பொத்தனுக்கு ஒக்கொண்டநாகன் ஒக்கதிந்தன் பட்டை பொத்தன் மேதவம் புரிந்த தென்று படாரிக்கு நவக்கண்டங் குடுத்து குன்றகீத்தலை அறுத்துப் பீடலிகை மேல் வைத்தானுக்கு திருவான்மூர் ஊரார் வைத்த பரிசா வது எமூர்ப்பறை கொட்டக் கல்மேடு செய்தாராவிக்குக் குடுப்பாரா ணூர் பொத்தனங்கிழவர்களும் தொறுப்பட்டி நிலம் குடுத்தார்கள் இது அன்றென்றூர் கங்கையிடைக் குமரி இடை எழுநூற்றுக்காதமும் செய் தான் செய்த பாவத்துப் படுவார் அன்றென்றூர் அன்றாள் கோவுக்கு காற்பொன் றண்டப் படுவார்.

## 3. கம்பவர்மனின் தா. வேளூர் நடுகல்

ஸ்வஸ்திஸ்ரீ கோவிசைய கம்பபருமற்கு யாண்டெட்டாவது வயிர மேக வாணகோவரையராள்த் தகடூர் நாட்டுப் பாகாற்றூர்க் கத வமாதேவன் மகன் காளமன் மீய்கொன்றைநாட்டு மேல்வேளூர் இருந்து வாழாநின்ற காலத்து முருங்கைசேரீ நத்தத....ன் றமையனூர் மகளைக் கள்ளர் பிடிக்க....த்தூரந்....கொண்டெய்ய...அவளை விடு வித்துத் தாள்பட்டான் காளமன்.

———